# சிவாஜி

ஆசிரியர்கள்
திரு லோக சீதாராம் — அ. வெ. ர. கிருஷ்ணசாமி.

## கோவையில் பயிற்சி



மாணவர்களை தேசீயப்படை வீரர்களாகவும், தொண்டர்களாகவும் கல்வி நிலையங்களே பயிற்றுவிக்கின்றன. மேலே காண்பவர் கோவையைச் சேர்ந்தவர்கள்.

## நூல்.

*

நூலெது? நூலெது?
காலப் புலவீர்!
அன்று காகிதம்
அன்று கருமை;
அன்றே அட்டை
அன்றே எழுத்துரு;
இன்ன யாவும்
பன்னும் பருமை
யுறுப்புக் குறிகளைத்
திறக்கும் கருவிகள்;
பருமை வழியே
நுண்மை இயங்கும்;
நூலோ நுண்மை;
மாலோ இல்லை;
நுண்மை நூலின்
வண்மை பெரிதே;
கருவை ஓம்பும்
திருவை உடையது
குழவி உள்ள
வழியைப் பெற்றது
முறைமுறை வாழ்க்கைத்
துறைகளைக் கொண்டது
மன்பதை பொதுவெனும்
அன்பைப் பூண்டது;
வகுப்பு நிறமொழி
மதநா டென்று
துன்ப மூட்டா
அன்பு நூலே
எங்கும் எல்லாம்
தங்கும் நெஞ்சைப்
பெற்றுக் கற்று
உற்றது நூலே
அறிவும் அறமும்
செறிந்து நிறைந்தது
தெய்வ நூலே
தெய்வ நூலே
தெய்வம் நூலே
வையம் நூலே
சான்றவர் பலரும்
ஆன்ற நூலே;
நூலைப் பயில்க
நூலைப் பயில்க;
காலப் புலவீர்;
சீல நூலைப்
பாடுக பாடுக
பாடுக நாளும்
என்றும் வாழ்க
இன்ப நூலே.

திரு. வி. க.

*

15—7—56

1 அணா

பழைய தராசு: 5 ரெட்டியார்

# பொருளும்—போகியும்

இன்று ஒரு அலங்கார புருடர் தராசுக் கடைக்கு வந்தார். வரும்போதே வாயில் ஒரு சுருட்டைப் புகைத்துக் கொண்டே வந்தார். நவநாகரீக புருடராக விளங்கிய அவர், சுத்த கர்நாடகம்போல் சுருட்டைப் புகைத்துக்கொண்டு வந்தது எனக்குப் பிடிக்கவில்லை,

நான்· சுருட்டை அப்படி எறிந்துவிட்டு உள்ளே வாருங்கள் என்றேன்.

அவர்: என்னை எறிந்துவிட முடியவில்லையே அப்பா, அது கைகூடி விட்டால் நான் சித்தியடைந்து விட்டவன் ஆவேனே.

நான்; உங்களை எறிந்துவிடச் சொல்லவில்லையே. நீங்கள் குடிக்கும் சுருட்டைத்தான் வீசி விடும்படி சொன்னேன்.

அவர்: நானா சுருட்டு குடிக்கிறேன் எறிவதற்கு! சுருட்டுதானே என்னைக் குடிக்கிறது. நான் அதை சுவைக்கிறேன்:

நான்; என்ன உளராட்டம்?

தராசு. மடையா யார் உளருகிறார்கள் நீயா அவரா?

அவர்; உன்னைச் சொல்வதில் குற்றமில்லை. இதை உணர்ந்திருந்தால் என்றோ உலகம் உருப்பட்டிருக்குமே.

நான்: நீங்கள் இருவரும் என்னைப்பைத்தியம் பிடிக்க அடித்து விடுவீர்கள் போல் இருக்கிறதே. இதுவென்ன கிரகச்சாரம்.

அவர். பைத்தியக்காரன் தான் ஒருவன் தான் சரியாக இருப்பதாகவும், மற்றவர்கள் அனைவருக்குமே பைத்தியம் பிடித்திருப்பதாகவும் கருதுகிறான்.

நான்: ஏது இன்று கடை திறந்த வேளை சரியில்லை போலிருக்கிறது. முடிவில்லாத வம்பாகவந்து வாய்த்துவிட்டது.

தராசு: எதையும் புதிதாக தெரிந்து கொள்ளாமல் தான் அறிந்ததே அறிவு என்ற குருட்டுப் போக்கில் நீயும் இருப்பாய் என்று நான் இதுவரை கருதவில்லை, உன்னை புத்திசாலி என்று கருதியிருந்தேன்,

நான்: சுருட்டை அவரல்லவா குடித்துக் கொண்டிருக்கிறார். கேட்டால் தன்னை சுருட்டு குடிப்பதாக தெரிவிக்கிறாரே இதை எப்படி ஒத்துக்கொள்வது?

அவர்: அப்படியா? அவ்வளவு தானா?

நான்: ஆமாம்.

தராசு: எந்த ஒன்றையும், தனித்து எவரும் நுகர்ந்துவிட முடியாது. இரண்டும் சேர்ந்தால்தான் இன்பம் நுகர முடியும், உலக படைப்பில் போகப் பொருளும், போகியும் இருவரும் சேர்ந்தால்தான் போகிக்க முடியும். அப்படிச் சேருவதிலும் சுருட்டை அவர் மனம் விரும்பியது. அவர் மனதில் அதனால் ஒரு தாபமும், பாசமும் ஏற்பட்டுவிட்டதோடு சுருட்டின் சூட்சமம் தீர்ந்துவிட்டது. மனிதன் சுருட்டுக்கு அடிமையாகி விட்டான், அது இப்பொழுது அவனைக் குடிக்கிறது. போகப் பொருளாக இருந்தது போகியாகவும், போகி, போகப் பொருளாகவும் மாறிவிட்டது.





நான் நினைக்கிறேன்:

# சாமியார்களும் பாம்புகளும்

—(வல்லிக்கண்ணன்)—

இந்தியாவில் சாமியார்களும் அதிகம். பாம்புகளும் அதிகம்.

இரண்டு இனங்களினாலும் நன்மையும் உண்டு; தீமையும் உண்டு. சில சமயங்களில், நன்மைகளை விடத் தீமைகளே அதிகமாக ஏற்படுவதும் இயல்பே.

சாமியார்கள் சமூகத்துக்கு என்ன நன்மை செய்கிறார்கள் என்று சிலர் சந்தேகப்படுவது உண்டு. சாமியார்களின் ஆத்மீக சக்தியினால் தான் சமூகம் அடியோடு நாசமாகாமல், மனிதப் பண்புகள் மக்கி மண்ணாகி விடாமல். நிலைபெற்று நிற்கின்றன என்று நம்புகிறவர்களும் இருக்கிறார்கள்.

பாம்புகளினால் மக்களுக்கு என்ன நன்மை என்று சிலர் சந்தேகிக்கக்கூடும்.

மனிதரின் முயற்சிகளுக்கு ஏதாவதொரு வகையில் குந்தகம் விளைவித்து வாழ்கிற எலிகள் போன்ற ஜந்துக்களை பாம்புகள் பிடித்து விழுங்கி விடுவதால், தொல்லைப்பிராணிகள் எண்ணிக்கையில் குறைகின்றன. பாம்புகள் இந்த உதவியைச் செய்யாவிட்டால் உபத்திரவ ஜந்துக்கள் மிக அதிகமாகிவிடும்.

பாம்புகளில் பல சுயநலத்துக்காகவே ஜீவிக்கின்றன. சாமியார்களும் அநேகர் இவ்விதமே உளர்.

ஆத்மீக வளர்ச்சிக்காக—வாழ்க்கையிலிருந்து உயர்வு அடைவான் வேண்டி — ஒதுங்கியிருந்து யோகம் புரிகிற சாமியார்கள் நல்லவர்கள். இவர்கள் நேரடியாக மனித வர்க்கத்துக்கு நல்லது செய்யாவிட்டாலும் கூட, இவர்களுடைய ஆன்மசக்தி உயிர்க்குலத்தை உய்விக்க வல்லதாம்.

ஆனால் பாம்புகளிலோ 'கரந்து உறையும்' இனம் கடும் விஷம் உடையது. பப்ளிக்காகத் தலைகாட்டினால் மக்களுக்கு அச்சம். அவற்றின் உயிருக்கும் ஆபத்து.

சாமியார்களில் 'அஞ்சாப்புறம் கிடக்கும்' ஜீவன்களில் போலி, சுயநலமி, வயிறு வளர்ப்பர், பிறரை ஏய்ப்பர், கலவிப்பிரியர் போன்ற ரகங்கள் பல உண்டு.

நல்லது செய்ய விரும்புகிற பரோபகாரச் சாமியார்களில் சிலபேர் நாட்டினில் திரிந்து தொண்டுகள் புரிவதும் இயல்பே யாகும்.

எது எப்படி ஆயினும், இந்தியாவுக்கு சாமியார்களாலும் பெருமை தான். பாம்புகளினாலும் பெருமைதான்.

அயல் நாட்டுப் பாமரர்களின் கவனிப்பைக் கவர் இந்த இரண்டு இனங்களும் பெரிதும் பயன்படுகின்றன.

---

"போருக்குவந்து எதிர்த்த கௌரவர்போலும் வந்தான் அவன், நேருக்கு அர்ஜுனன் தேரில் கசைகொண்டு நின்றதும் கண்ணனன்றோ,"

என்ற தத்துவப்படி இப்பொழுது சுருட்டாக இருப்பதும் மனிதனாக இருப்பதும் ஒரே பொருள் தான் வேறு தோற்றங்களிலேவந்து ஒன்றை ஒன்று தழுவுகின்றது. எனவேதான் தன்னை சுருட்டு குடிப்பதாக தெரிவித்தார் அந்த தேசிகர்.

நான்: தங்கள் பெயரா அது?

அவர். எதுவாயிருந்தால் என்ன? தராசு சொன்னது சொன்னதுதான், அதையே வைத்து அழைத்தால் போச்சு.

நான்: தராசுக் கடை பக்கம் அடிக்கடி வரவேண்டும். வந்து சிறப்பிக்கவேண்டும். எனக்கும் பலனுண்டு.

தேசிகன்: பலனெண்ணாமல் உழைக்கச் சொன்னாள் பக்தி செய்து பிழைக்கச் சொன்னாள் என்று கூறிக்கொண்டே எழுந்து சென்றார் அவர்.

# தட்சணப் பிரதேசக் கூச்சல் தற்பொழுது வேண்டாம்

## தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் எச்சரிக்கை

## "அமிர்தசரஸ் தீர்மானத்தைக் காட்டி என்னை அச்சுறுத்த முயல வேண்டாம்"

### தமிழ் நாடுபற்றி மட்டும் தற்பொழுது சிந்தியுங்கள்

—காமராஜ்

தட்சணப் பிரதேசம் பற்றி காங்கிரஸ் வாதிகளுக்குள் ஒரு கலவரம் இருந்து வருகிறது. தட்சணப் பிரதேச கொள்கையை ஆதரிப்போரும் எதிர்ப்போருமாகச் சேர்ந்து ஒரு கலகலப்பைத் தமிழ் நாட்டில் ஏற்படுத்தி விட்டார்கள்.

தட்சணப் பிரதேசக் கொள்கையை எதிர்ப்பவர்கள் காமராஜரின் கையாட்களென்றும், ஆதரிப்போர் ராஜாஜியின் கையாட்களென்றும் ஒருவருக்கொருவர் கார சாரமாக மேடையிலேநின்று விளாசவும் முனைந்துவிட்டார்கள்:

தட்சணப் பிரதேசம் வேண்டும் என்பவர்களாவது அதன் அவசியத்தை உணர்ந்து பேசுகிருர்களா? எதிர்ப்பவர்கள் அதன் தீமைகளை சிந்தித்துப் பேசுகிருர்களா என்பது சந்தேகம்தான்: ஏனெனில் கொள்கை அளவில் மாறுபாடுள்ள "கருத்துக்கள்" இருந்தால் வாதத்திலும் பேச்சிலும், பதட்ட மிருக்காது, அடக்க மிருக்கும். இன்று அடக்கம் அடகு வைக்கப்பட்டுவிட்டது..........

தட்சணப் பிரதேசம் வேண்டும் என்பவர்கள் தட்சணப் பிரதேசம் இல்லாவிட்டால் தலைபோய்விடும் என்பதற்குத் தக்க காரணம் சொல்லவில்லை. வேண்டாம் என்பவர்கள் தட்சணப் பிரதேசம் வந்தால் தலைக்கு ஆபத்து என்பதை விளக்கிப் பேசிவிடவும் இல்லை.

தட்சணப் பிரதேச ஆதரிப்பு மகாநாடுகள், எதிர்ப்பு மகாநாடுகள் கூட்டப்பட்டு கட்சி சேர்க்கப்படுகிறது. காரசாரமான சொற்பொழிவுகள், தீர்மானங்கள் நிறைவேற்றப் படுகின்றன.

முதல் அமைச்சர் காமராஜ் கல்லுச் சாமியாக இருந்தவர் வாய் திறந்து சொல்லிவிட்டார்; தட்சணப் பிரதேசக் கொள்கையை தான் ஒப்புக்கொள்ள வில்லை என்று. வந்தது கொஞ்சம் விருவிருப்பு. கொப்பம்பட்டியின் பெயர் எல்லா பத்திரிகைகளிலும் இடம் பெற்றது. சூடு பிடித்தது. எப்படி இவர் சொல்லலாம்; இது அமிர்தசரஸ் தீர்மானத்திற்குஅவமானம் செய்ததாகும் என்று அலறினுர்கள் பலர்:

அமிர்தசரஸ் தீர்மானம் பற்றியும், அது நிறைவேற்றப் பட்ட பொழுது அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அங்கத்தினரான காமராஜ் தலையாட்டினதாகவும் அது அவரது சம்மதத்தைக் காட்டுவதாக இருந்தது என்றும், இன்று அவர் மாறிப் பேசுகிருர் என்று அறிக்கைகள் பறந்தன.

காங்கிரஸ் வாதிகளுக்குள் இரு பிரிவாக, இடம் வலமாக பிரிந்து விடுவதற்கு முஸ்தீப்புகள் நடைபெற்று வருவதைக் கவனித்தது தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி. தக்க சமயத்தில் தமிழ் நாடு காங்கிரசின் காரியக் கமிட்டி கூடியது,

அந்தக் கூட்டத்தில் இந்தப் பிரச்னையைக் கிளப்பினுர்கள். அமிர்தசரஸ் தீர்மானத்தை எடுத்துக்காட்டினுர்கள், முதல் அமைச்சர் காமராஜ் எழுந்து "அமிர்தசரஸ் தீர்மானம் ஒரு சிபார்சே தவிர கட்டளையல்ல, அதன் மீது அபிப்பிராயம் சொல்ல எல்லா அங்கத்தினருக்கும் சுதந்திரம் உண்டு. அமிர்தசரஸ் தீர்மானத்தைக் காட்டி என்னை அச்சுறுத்த முயல வேண்டாம்" என்பதை அப்பட்டமாக விளக்கி விட்டதோடு காங்கிரஸ்காரர்கள் இனி தட்சணப் பிரதேசத் தகருரில் ஈடுபடாதிருக்க வேண்டும் என்பதாக ஒரு தீர்மானத்தையும் நிறைவேற்றச் செய்திருக்கிருர்.

தட்சணப் பிரதேசம் வேண்டுமா வேண்டாமா என்பதல்ல இன்றுள்ள பிரச்னை. அதை ஒரு போர்வையாக வைத்துப் போர் தொடுக்கமுனைந்துள்ளவர்களின் சவாலைத் தான் ஏற்றுக்கொண்டதாக காமராஜ் அறிவிக்கும் எக்காளக் குரலே தமிழ்நாடு பிரதேச காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானமாக உருவாகியிருக்கிறது.

தமிழ் நாட்டின் எதிர்காலம் பற்றிய எந்த முடிவையும் ஒரு சிலர் தீர்மானிக்கத் தமிழ் மக்கள் இணங்கும் காலம் மலையேறிவிட்டது. தக்க காரணம் காட்டி மக்கள் ஆதரவைப் பெறுவதில்தான் தலைவர்களின் செல்வாக்கு இனி விளங்கப் போகிறது. இந்த நிலை தெரியாமல் கட்சிக்குள்ளே கட்சி கட்டி அதிலே ஒரு குட்டிக் கட்சியாக நின்று குளறுபடி செய்யாமல் தங்கள் லட்சியங்களை மக்கள் முன் விளக்கி ஆதரவு தேடுவதுதான் இனி நடக்கக்கூடிய காரியம்,

பசு மாடு வாங்குவதற்கு முன்பே, தாய்வீட்டுக்கு மோர் கொடுத்தனுப்பக்கூடாது என்று சச்சரவிட்டுப் பிரிந்து பிணங்கியதம்பதிகளைப்போல் காங்கிரஸ் வாதிகள் பிணங்கி நிற்பதில் பிரயோஜனம் இல்லை,

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி என்ற பெயரிருக்க, தமிழ்நாட்டை மட்டும் சென்னை என்றேதான் அழைக்கவேண்டும் என்று தீர்மானம் செய்த திடசாலிகள் எதை சாதித்து விடப் போகிருர்கள்;

முதலில் தனித் தமிழ்நாடு அமையவேண்டும். அதன் பின்னர் தான் இதர ராஜ்யங்களுடன் இணைவதா வேண்டாமா என்ற பிரச்னை எழும் அப்பொழுது அதைப்பற்றி முடிவு செய்துக்கொள்ளலாம். இப்பொழுது ஆதரவோ, எதிர்ப்புக் கூச்சலோ ஏதும் வேண்டாம்.

---

மதிப்புரை.

## வள்ளல்

### அல்லது

## பாரி.

ஆசிரியர் எ. ஸ்ரீநிவாஸய்யங்கார். அட்வகேட் பரமக்குடி. பக்கம் 82, விலை ரூ. 1–0–0

வள்ளல் பாரியின் வாழ்க்கைச் சிறப்பினை எடுத்துக் காட்டி வரலாற்றினை விளக்கும் நாடக நூல் இது. பாரியின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை சித்தரிக்க ஐந்து அங்கமாகப் பிரித்து, காட்சிகள் பல கண்டு, நல்ல கட்டுக்கோப்புடன் நாடகத்தை விருவிருப்பாக உருவாக்கியிருக்கிருர் இந்நூல் ஆசிரியர். வள்ளுவர் குறட்பாக்களும், புறநானூற்றுப் பாக்களும் நாடகத்தின் இடையே இணைந்து சிறப்புக்குச் சிறப்புக் கொடுக்கிறது. வள்ளல் பாரியின் சரிதை தமிழ் மக்களின் சரிதமாகிவிட்டது எதனுல்? தமிழ் மன்னர்களின் சிறந்த பண்பாடும், நோக்கமும் லட்சியங்களும் எதைத் தழுவிநிற்கின்றன? மன்னன் ஆண்டது குறுநிலமே ஆயினும் மக்களின் மனதில் தனது ஆட்சிக்கு அசையாத ஆதரவு கண்டது எவ்விதம்? இத்தகைய சிந்தனையைத் தூண்டும் வினுக்களுக்கு விளக்கமாக விளங்குகிறது இந்த நாடக நூல், படிப்பதற்கும் நடிப்பதற்கும் பயன்தரும் நல்ல நூல். தமிழ் மக்கள் இந்நூலை பயன்படுத்தினுல் அது நாட்டுக்கு அதுவும் இந்த காலத்திற்கு மிகவும் நல்லது,



# கணபதிராயன் பேசுகிருன்

*சீவகுமாரன்*

முதலவர் முத்துதிர்த்தார். இவ்வளவு நாள் மதில் மேற் பூனையாக நின்று பொது மக்கள், பத்திரிகைகள், என்று சுட்டிக் காட்டாமல் தாம் தட்சிணப் பிரதேசத்தை ஆதரிக்கவில்லையென்று கூறிவிட்டார். அந்த அளவுக்கு அவருக்கு நமது பாராட்டுகள். ஆனல் இதைக்கூற இவ்வளவு நாள் காத்திருக்க வேண்டாம், இவ்வளவு பதற்றமும் அவசியமில்லை. ஏனெனில் விஷமிகள் அவரது வார்த்தைகளைத்திரித்துப் பிரசாரம் செய்ய அவரது மொழிகள் இடந்தருகின்றன. தட்சிணப் பிரதேசத்தை ஆதரிக்கிறவர்கள் இருவகையினர். உண்மையிலேயே மொழிவாரிப் பிரிவினையில் நம்பிக்கை இல்லாதவர்கள் ஒரு சாரர். அவர்கள் இன்று மட்டுமல்ல. என்றுமேமொழிவாரிப் பிரிவினையை எதிர்த்திருக்கிருர்கள். அந்த யோசனை காட்டுமிராண்டி தனமானமானது என்று கூறவும் அவர்கள் தயங்கவில்லை இந்த இனத்திலேயே அடுத்த படியில் நிற்பவர்கள் முதுமகனின் அரசியல் முன்னேட்டத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் அவரது கொள்கைகளில் பூரண நம்பிக்கை கொண்டிருந்தும் சந்தர்ப்பங்களின் கோளாறினல் பொறுப்புள்ள பதவிகளில் நிற்கிறவர்கள் மேலிடமும் திடீரென விழித்துக்கொண்டு மொழிவாரி மாகாணம் பாஷை வெறியை வளர்க்கும் என்ற புதியதொரு உண்மையை உரை செய்திடவே அவர்களுடைய நல்ல பெயரைப் பெறவும் இவர்கள் விரும்புகிருர்கள் ஷஹீத் நகரிலும் இதே ரீதியில் பின்னணிக் கீதம் இசைத்தார்கள். சுயமாகச் சிந்திக்கும் திறன் இவர்களுக்குக் குறைவு என்ற உண்மையைப் பொதுமக்கள் உணர்ந்துகொண்டு விட்டார்கள்.

மற்ருெரு பிரிவினர் உண்மையிலேபே முதலவரின் எதிரிகள். அவரது அரசியல் சக்கரம் பாக்கிய ராசியிலேயே வெகு தினங்களாகச் சுழல்வதைக்கண்டு பொருமை கொண்டவர்கள் இன்றைய முதல்வர் பதவி யேற்பார் என்ற விஷயம் அவர்கள் சிறிதும் எதிர்பாராததொரு சம்பவம். பின்னும் அவரது ஆட்சியால் பூகம்பமோ, புயலோ, ஏற்படாமல், கருஞ்சிந்தையாளர்களையும் அவர் சமாளித்துக் கொண்டு போகவே அவர்களது அசூயை இன்னும் அதிகமாகிறது இந்த மனிதர் அசைக்க முடியாமல் நிற்கிருரேயென்று அவர்கள் குமுறுகிருர்கள். ஆகவே தட்சிணப் பிரதேசம் வந்தாலாவது இவரைப் பதவியிலிருந்து உதறிவிடலாமே என்று அவர்கள் எண்ணுவது இயற்கை. சட்டசபையில் கஜபதி நாயக்கர் குறிப்பிட்டது இந்த உண்மையைத்தான்.

இந்த இரு பிரிவினரைத் தவிரத் தமிழ் நாட்டில் யாருமே தட்சிணப் பிரதேச யோசனையை ஆதரிக்கவில்லை. கருஞ்சிந்தையாளர்களின் முன்னணி ஆதரிக்கும் யோசனை தட்சிணப் பிரதேசம் அல்ல. அது தனித் திராவிட நாடு, அதற்குத் தமிழ் நாட்டில் கொஞ்சம் ஆதரவு இருக்கலாம். கன்னட. மலையாள ஆந்திரப் பிரதேசங்களில் இதற்கு ஆதரவு இல்லை. இந்த ரீதியில் சிந்திக்கும் கட்சிகள்கூட அந்த மாகாணங்களில் இல்லை. தனிப்பட்டோர் இருந்தாலும் அதை வெளிப்படுத்த அவர்களுக்குத்துணிவு கிடையாது. ஆகவே தட்சிணப் பிரதேசத்தை ஆதரிப்பவர்கள் தி. மு. க. வைச் சேர்ந்தவர்கள் என்பது பொருந்தாது. பதற்றத்தால் சிதறிய வார்த்தை.

இன்னெரு உண்மையை நினைவுறுத்திக்கொள்வது நலம், அமிர்தசரஸ் தீர்மானம் அழகாகக் கோக்கப்பட்ட வாசகங்களுள்ள மலர்மாலை. காகிதப் பூமாலை, பம்பாய்க் கலவரங்கள் நிகழ்ந்திராவிட்டால் அமிர்தசரஸ் தீர்மானமே வெளிவந்திராது, பம்பாய் நகரம் அதன் உரிமையாளர்களுக்குஅளிக்கப் பட்டிருந்தால் கலகமேபகழ்ந்திராது. ஆகவே இவையனைத்தும் ஒரு தவறை அடிப்படையாகக்கொண்ட கட்டடம். நாட்டின் நன்மையை முன்னிட்டு மக்கள் விரும்பிக் கூட்டாகச் சேர்ந்தால் அது உறுதியானதாக இருக்கும். தவறுக்குப்பரிகாரமாக விளைந்த ஆலோசனையின் பேரில் அமைந்த வீடு உறுதியாக இருக்கவே முடியாது. அவ்வாறு எதிர்பார்ப்பது அரசியல் ஞான சூன்யம். ஆகவே அமிர்தசரஸ் தீர்மானத்தின் திறை மறைவில் நின்று தட்சிணப் பிரதேசத்தை ஆதரிப்பவர்கள் நடிப்புச் சுதேசிகள்.

தேர்தல் நெருங்கி வந்து கொண்டிருக்கும் தருணத்தில் பலரும் பலவாறு பேசுவதும் பதற்றப்படுவதும் சகஜம். தன்னலமற்ற சேவை ஒன்றுதான் நமது முதல்வருக்குள்ள விசேஷ யோக்கியதாம்சம் அந்த இலட்சியம் அவரது சிந்தையினின்றும் நீங்காத வரையில் அவர் தேர்தலைக் குறித்துக் கவலைப்படவேண்டாம். சேவையொன்றையே யோக்கியதையாகக் கொண்ட அபேட்சகர்களைத் தேர்தலுக்கு நிறுத்திவிட்டு அவர் தூங்கப் போகலாம், ஏனெனில் வாக்காளர்கள் விழிப்புடனிருக்கிருர்கள்,

# உஸ்பெக் கதைகள்

## பேராசை பிடித்த மன்னன்

தூரதேசத்தில் ஒரு ராஜா இருந்தான். ஒருநாள் அவன் வேட்டைக்குச் சென்ருன். வேட்டையாடும்போது எப்படியோ அவனுக்கு வழி தவறிவிட்டது. அவனுடன் வந்திருந்த ஏவலாளர்களும் எப்படியோ பிரிந்து போய்விட்டார்கள். மலைகளிலும், பள்ளத்தாக்குகளிலும் அவன் சுற்றியலைந்தான். நீண்ட நேரம் இவ்வாறு திரிந்த பின்னர், ஒரு தனிமையான குடிசையை அவன் கண்டான். அலுத்துக் களைத்துப்போன தன் குதிரையை அக்குடிசையை நோக்கி நடாத்திஞன்.

அந்தக் குடிசையில் ஒரு கிழவி தன்னுடைய மகளுடன் வசித்து வந்தாள். மகளுடைய பெயர் அஜீஜா. தங்களுடைய எளிய குடிசைக்கு எழுந்தருளிய அரசனை மிகுந்த மரியாதையுடன் வரவேற்று உபசரித்தார்கள். தங்கள் வீட்டிலிருந்த சிறந்த உணவையும், பானத்தையும் மன்னனுக்கு அளித்து மகிழ்வித்தார்கள்.

களைத்துப்போன அரசன் ஓய்வெடுக்க விரும்பி. கணப்புச் சட்டிக்கு அருகிலிருந்த கட்டிலில் படுத்தான். அவ்வளவுதான்: நன்கு தூங்கிவிட்டான். மாலை வரையிலும் அவன் எழுந்திருக்கவேயில்லை. எனவே அந்தத்தனிமையான குடிசையில் அன்றிரவை அவன் கழிக்க வேண்டியதாயிற்று.

இந்தக் கிழவியிடம் ஒரு பசு இருந்தது. மாலை நேரத்தில் அஜீஜா அதில் பால்சுரந்தாள். ஒரு பெரிய பாத்திரம் நிறைய பால் கிடைத்தது.

இதைப்பார்த்ததும் அரசன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்: "இந்தப் பசு ஏராளமான பால் கொடுக்கிறது. நான் அரண்மனைக்குத் திரும்பிச்சென்றதும் இந்தக் கிழவிக்கு உடனே உத்திரவு போட வேண்டும். ஒவ்வொரு வாரமும் பெரிய பாத்திரம் நிறைய பாலை வரியாக எனக்கு செலுத்தும்படி கட்டளையிட வேண்டும். என்னுடைய கஜானவை மேலும் நிரப்புவதற்கு இது உதவி செய்யும்."

மறுநாள் காலையில் அஜீஜா பால் கறக்கச் சென்ருள். ஆனல் மிகக் கொஞ்சம் பால் தான் கிடைத்தது. உடனே ஓடோடியும் தன் தாயாரிடம் வந்து கூறினுள்:

"அம்மா! அம்மா! பசுமாட்டிற்கு உடம்பு சரியில்லை போலிருக்கு. பால் வற்றிவிட்டது."

கிழவி தன் தலையை ஆட்டி அசைத்துக்கொண்டே கூறினுள்;

[9- பக்கம் பார்க்க]

# திருச்சியின் பங்கு

—(ரா. நா.)—

திருச்சிப் போராட்ட வீரர்களில் முதல் தலைமுறையினர் ஜாபிதா முடிவடைந்து விட்டது. அதற்கடுத்த தலைமுறையினர் பற்றிய விவரம் தொடங்குகையில் 'சுதேசி' பாலுவின் ஞாபகம் வருகிறது. சமீபத்தில் 60-வது ஆண்டு விழா பூர்த்தி கொண்டாடிய திரு. வை. பாலசுப்ரமணியத்தைத்தான் குறிப்பிடுகிறேன்.

பாலுவென்றவுடன் கோட்டை ரயில் நிலையத்திற்குச் செல்லும் ரஸ்தா மலையடியில் அவர் நடத்திய சுதேசிக் கடையை என்போன்றவர்கள் மறக்கமுடியாது. சுதேசி ஆர்வத்தில் கடை திறந்தார். அக்காலத்தில் சுதேசிப்பற்றில் பணம் சம்பாதித்தவர்கள் யாரும் கிடையாது. எப்படியாவது எல்லோருக்கும் சுதேசி ஆர்வம் உண்டாக்க வேண்டும் என்னும் ஆவலில் சுதேசி விற்பனையாளர்கள் தமது சரக்குகளை பிறர் தலையில் கட்டுவர். அவர்களும் ஆனந்தமாகச் சாமான்களை வாங்கிக் கொண்டு செல்வர். செலவு தந்தைக்கோர் ஆயிரம்' என்று பாரதியார் அக்காலப் பள்ளிப்படிப்பைப் பற்றிச் சொன்னது போல்தான் ஆகும் இந்த சுதேசி வியாபாரமும். நண்பர் பாலு கண்ட பலன் தனது முதல் கரைந்து போனது தான். இந்தக் "கையைக்கடிக்கும்" அனுபவம் தான்பாலுவுக்கு தேசப்பணியில் ஞானஸ்தானம்" செய்வித்தது.

பாலு தேச நலனில் மனதையும் உள்ளத்தையும் பறிகொடுத்ததனால் பெட்டியடியில் நிம்மதியாய் வியாபாரம் செய்ய முடியவில்லை. 1917லிருந்து தேச காங்கிரஸ் பற்றுக்கொண்ட பாலு, டாக்டர் ராஜன், சாஸ்திரியார் முதலியோருடன் முதல் ஒத்துழையாமை இயக்கத் தொடக்கத்திலேயே கைது செய்யப்பட்டு சிறை தண்டனை பெற்றதில் ஆச்சரியமில்லை. அதிலிருந்து அவருடைய தீர்மானமான தேசப்பணி ஆரம்பமாயிற்று.

உப்பு சத்தியாக்ரஹ காலத்தில் டாக்டர் ராஜன் முதலிய முதல் வட்டத் தலைவர்களெல்லாம் சிறையிடப் பட்டவுடன் இயக்கத்தை நடத்துவது இளவட்டர்களாகிய எங்கள் பொறுப்பிலிருந்தது. ஸ்ரீரங்கம் ரயில் நிலையத்திற்கருகாமையிலுள்ள கொடியாலம் மாளிகையில் வேதாரண்யத்திற்குத் தொண்டர்கள் அனுப்பும் பொறுப்பு எனக்கு அளிக்கப்பட்டு திரு ஹாலாஸ்யம் பின்னியிலிருந்து இயக்கத்திற்கு ஆக்கமளிக்க வேண்டுமெனவும் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் காரர்களால் திட்டம் செய்யப்பட்டது.

திருச்சி கிலேதார் தெருவில் தொண்டர் முகாம் நடந்தது. தினம் தினம் மாலையில் பொதுக் கூட்டம் நடைபெறும். திருச்சியிலிருந்து பல்வேறு உப்பளங்களுக்குத் தொண்டர்களை அனுப்பி அவர்களைப் போலீஸார் மிருகத்தனமாக நடத்தினால் பாதுகாக்க சென்னை மாஜி உதவி மேயர் தி. கு. லட்சுமணசுவாமி முதலியார் அனுப்பப்பட்டார். அவர் தொண்டர்களைச் சேர்ந்தவர் எனப் போலீஸார் அறியாமல் பணிபுரிய வேண்டிவந்தது. இதை அவர் வெகு நேர்த்தியாகச் செய்து வந்தார். அவர் தனது பணிபற்றி திருச்சி முகாமுக்கு அனுப்பிய கடிதங்களெல்லாம் போலீஸ் பார்வைக்குத் தப்பாமலிருக்க திரு.பாலுவின் இல்லத்திற்கே அனுப்பப்பட்டன.

பொதுக் கூட்டங்களில் பாலு பாடுவார், ஆவேசமாகப் பேசுவார். பாரதியார் பாடல்களை இனிமையாகப் பாடுவதில் திருச்சியில் அவருக்கு நிகர் யாரும் கிடையாது. ஒருநாள் டவுன் ஹால் சதுக்கத்தில் 'நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர், நிதிகுறைந்தவர் காசுகள் தாரீர், அதுவுமற்றவர் வாய்ச்சொல் அருளீர், ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர். என்று பாரதியார் பாட்டைப் பாடியதும் தொண்டர்கள் வைத்திருந்த உண்டியல் களெல்லாம் நிரம்பி ஏராளமாகத் தொண்டர்களும் சேர்ந்தனர். டாக்டர் ராஜன் கைது செய்யப்பட்டு எங்கள் முகாமை போலீஸார் கைப்பற்றியதற் குள்ளிருந்த 22 நாட்கள் இராப்பகல் ஓய்வின்றி பாலு தொண்டாற்றினர். இன்பம் நிறைந்த அந்த 22 நாட்களை நாங்கள் மறக்கவே முடியாது. (அந்த முகாமின் ஜீவனாயிருந்த சி. து. கோபாலன் பற்றி பின்னர் எழுதுகிறேன்.)

1934-ல் திருச்சியை விட்டு நான் சென்னை வந்த பிறகு திருச்சி காங்கிரஸ் நண்பர்கள் பற்றி எனக்கு அதிகம் தெரியாது. பாலுவும் மற்ற காங்கிரஸ் நண்பர்களுக்கும் இனிமையான தொடர்பு இல்லை என்பது அவருடைய 60-வது ஆண்டு பூர்த்தி விழா சம்பந்தமாக எனக்குக் கிடைத்த தகவல்களிலிருந்து தெரிகிறது. அம்மாதிரி பிணக்குக்கு காரணம் யாதானாலும் காங்கிரஸ் காரர்களுக்குள் பிளவு இருத்தல் கூடாது என்பது என் தாழ்மையான எண்ணம்.

'விவசாயி'யை பாலு தொடங்கிய ஆரம்பத்தில் அதன் இதழ்களில் இந்த மாத்ஸர்யங்களின்சாயை காணக்கண்டேன். சமீபகால இதழ்களின் நிலவான்களின் நலனுக்காகப்பாடுபடுவதாகத் தெரிகிறது. நாட்டுப் பற்றுக் கொண்டவர்கள் நாட்டு நலனை மட்டும் மனதிற் கொண்டு பாடுபட்டு சொந்தக் குறைகளை மறந்துவிடுவதே நல்லது. திருச்சி அரசியல் தொண்டர்கள் ஒன்றுபட்டிருப்பதை பார்க்கவே அந்த மண்ணில் பிறந்த நான் ஆசைப்படுகிறேன். திருச்சி காங்கிரஸ் காரர்கள் அனைவரின் அன்புக்குப் பாத்திரமாயிருப்பதுபற்றி நான் பெருமை கொள்கிறேன். ஆகையால் பிளவுபட்டு நிற்கும் நண்பர்கள் ஒன்று கூடவேண்டுமென நான் பிரார்த்திக்கிறேன். என் பிரார்த்தனையின் பயன் யாதானாலும் பாலுவின் தேசப்பணியையும், தியாகத்தையும் அக்காலத்தில் அவர் காட்டிய தீரத்தையும் யாரும் மறக்க முடியாது.

## அமுத வாக்கு

'லோக நடையினாலே சாஸ்திரம் பிறக்கிறது. அந்த சாஸ்திரத்தைப் பயிற்சியினாலே விஸ்தாரப்படுத்துகிறார்கள். ரஸதிருஷ்டி ஏற்படுவதற்கு இயற்கையே மூலம். ரஸவான்களுடைய பழக்கத்தாலும் பக்தி வழிகளை அனுசரிப்பதனாலும் ஒருவன் ரஸக்காட்சியை வருவித்துக் கொள்ளலாம்.

—பாரதி

# சிவாஜி

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே.

ஓலை 21] 15-7-56 [வாரம் 32


## யானைவரும் முன்னே

பொதுத் தேர்தல் வரப் போவதை முன்னிட்டு எல்லாக் கட்சிகளுக்கும் விருவிருப்பு இப்பொழுதே ஏற்பட்டு விட்டது. மறைந்து கரைந்து போன கட்சிகூட தேர்தலுக்காகப் புனர்ஜென்மம் எடுத்திருக்கிறது.

இந்திய கம்யூனிஸ்டுக் கட்சி தனது பார்லிமெண்டரி போர்டுக்குப் பதினோரு நபர்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறது. இந்தியா பூராவும் தேர்தல் களத்திலே காங்கிரஸோடு முட்டிப்பார்க்க கம்யூனிஸ்டு கட்சி துணிந்து இருக்கிறது.

அக்கம் பக்கத்தில் இருப்பவர்களையும் ஒரு குறைந்த பட்சக்கூட்டுறவில் கூவி அழைத்திருக்கிறது. பி. சோ. கூட்டுறவை நாடி ஒரு கோரிக்கையும் அனுப்பி வைத்திருக்கிறது. கூட்டுறவு பலப்பட்டால் நாடு என்னாகும் என்பதையும் அறிவித்திருக்கிறது.

பல மாகாணங்களில் பதவி ஏற்பு, பல மாகாணங்களில் பலமான எதிர்க்கட்சி, இவ்வாறெல்லாம் பகல் கனவு கண்டிருக்கிறது. காங்கிரஸ், மக்களுக்குப் பாதமான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதாகவும் ஜனநாயகத்தைப் பாழ்படுத்திவிட்டதாகவும் மக்கள் ஏழ்மையில் உழலுவதாகவும் காங்கிரசின் மீது தேர்தல் கல்லெறி வீச்சு ஆரம்பித்திருக்கிறது கம்யூனிஸ்டு கட்சி.

இந்த நிலையிலும் மக்களிடத்தே கொஞ்சம் ஜனநாயக உணர்ச்சி தலையெடுத்திருப்பதற்குத் தாங்கள் நடத்திய கலவரங்கள், புரட்சிகள், போராட்டங்கள், கிளர்ச்சிகள், கூச்சல்கள், கூப்பாடுகள் தாம் காரணம் என்பதையும் அறிவித்திருக்கிறது.

பாஷாவாரிக் கிளர்ச்சிக்கும், மாணவர்களின் கல்விக் கிளர்ச்சிக்கும் தாங்கள் தாம் காரணம் என்பதையும் அறிவித்திருக்கிறது.

இவர்கள் சொல்வது போல ஆட்சியில் பொறுப்பு தப்பித் தவறி இவர்களிடம் சிக்கினால் மக்கள் மனிதராக வாழ்வதற்கே எத்தனை கிளர்ச்சிகள் நடத்த வேண்டியிருக்குமோ யார் கண்டார்கள்?





## சிறிது வெளிச்சம்

ஆரம்ப செகண்டரி கிரேட் ஆசிரியர்களுக்கு பென்ஷன் அளிக்கும் திட்டத்தை அமுல் நடத்த சென்னை அரசாங்கம் முடிவு செய்திருப்பது கண்டு மகிழ்ச்சி.

இந்த ஏற்பாடு 1955 ஏப்ரல் முதல் தேதியிலிருந்தே அமுலுக்கு வருகிறது என்பதைக் கேட்டு நமது பாராட்டுகள்.

ஆசிரியர்களின் நிலை மோசம் என்பது மாறி, பரவாயில்லை என்ற அளவுக்கு உயர்ந்திருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. ஆசிரியத் தொழிலும் செய்யலாம் என்ற நம்பிக்கை படித்தவர்களிடையே துளிர்க்க ஆரம்பித்திருக்கிறது.

எதிர்காலத்தில் ஆசிரியர்களின் நிலை உன்னதமாக்கப்படும் என்று கவிஞர்கள் கனவு காணவும் முனைந்துவிட்டார்கள். வெளிப்படையாகச் சொல்லவும் தொடங்கியிருக்கிறார்கள்.

இந்தியநாட்டின் எதிர்காலச் செல்வங்களைத் தயாரிக்கும் இந்த ஆசிரியப் பெருமக்கள் நிலை உயர்ந்துதான் ஆக வேண்டும். மாணவர்களிடம் கடன் வாங்கி வாழ்க்கை நடத்தும் ஆசிரியர்கள் கட்டுக் கட்டாய் இந்த நாட்டில் இப்பொழுது இருக்கிறார்கள். ஆசிரியர்களின் வறுமை நிலை மாணாக்கர்களிடையே அசிரத்தையை பரப்புகிறது.

ஆசிரியர்களின் இல்லத்திலும் ஒரு வகுப்பறைபோலப் பிரத்தியேகக், கல்விச்சாலைகளும், கல்லூரிகளும் நடைபெறுகின்றன. இவையெல்லாம் எதைக் காட்டுகின்றன? அவல நிலையல்லவா?

சென்னை அரசாங்கம் மிகவும் துணிகரமாக பென்ஷன் கொடுக்க முன்வந்ததைப் பாராட்டுகின்றோம். மத்திய அரசாங்கத்திடம் உதவித் தொகை கோரி, ஆசிரியர்களின் சம்பள உயர்விலும் சற்று சிரத்தை காட்டுமாறு அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகின்றோம்.

## உணர்ச்சி மிக்க பிரசங்கம்

“அணு அஸ்திரங்கள் வெடிப்பதால் சிதறும் அணுத்துகள்கள் எத்தனையோ காலம் காற்றில் சஞ்சரித்துக்கொண்டே இருக்கிறது. நெருப்பைப் போல் அதை அணைக்க முடியாது இவற்றில் கலந்துள்ள ஸ்ட்ரான்ஷியம் எலும்பிலேயே புரைகுழல் உண்டாக்கவல்லது. பசும் பால் மூலம்கூட மனிதன் உடலுக்குள் இது சென்றுவிடலாம்” என்று உலக விஞ்ஞானிகளின் கூற்றுகளை ஆதாரம் காட்டி மேற்கொண்டு அணு அஸ்திரச் சோதனைகளை நிறுத்துமாறு இந்திய பிரதிநிதி ஸ்ரீ. வி. கே. கிருஷ்ண மேனன் ஐ. நா. ஆயுதக் குறைப்புக் கமிட்டி முன்பு கேட்டுக்கொண்டார்.

முதல் பிகினி அணுகுண்டு பரிசோதனை நடந்த 13 மாதங்கள் கழித்து அதனால் வெளியான அணுத்துகள்கள் 10லட்சம் சதுர மைல் சமுத்திர ஜலத்தைப் பாதித்திருப்பதாக யு. எஸ். விஞ்ஞானிகளே அறிவித்திருப்பதை பிரஸ்தாபித்து, தரை பாலைவனம், கடல் எங்கு இவை சோதிக்கப்பட்டாலும் காற்றை கட்டுப்படுத்துவதும் அதன் போக்கை முன்கூட்டி நிர்ணயிப்பதும் முடியாதென்பதால் எல்லோருக்குமே ஆபத்து தான் என்றார் அவர். கணிசமான மெஜாரிடி வோட்டுக்களைக் கூட காற்று மதிக்காது என்று அவர் கூறியபோது சிரிப்பு எதிரொலித்தது.

ரஷ்யாவிலும் அமெரிக்காவிலும் அணுகுண்டு சோதனை செய்வதற்கு மத்தியில் இந்தியாவும் ஜப்பானும் அகப்பட்டுக்கொண்டிருப்பதாக அவர் கூறினார். கல்கத்தாவில் இந்தியவிஞ்ஞானிகள்காய்கறிகள் அரிசி பதார்த்தங்களைப் பரிசோதித்துப் பார்த்ததில் அணுக் கதிரியக்கத்தினால் பாதிக்கப்பட்டிருந்தன என்றார் மேனன்.

ஏற்கெனவே உள்ள அஸ்திரங்களே இந்த கோளத்தை சுக்கு நூறாக்கப் போதும் இனிமேலும் சோதனை எதற்கு என்று அவர் கேட்டார்.

# "மனைவி"

—(ராஜாமணி)—

★

ஹரிஹரன் எந்தவிதத்திலும் கெட்டவன் அல்ல. பிறருக்கு கெடுதல் நினைக்கமாட்டான். கொஞ்சம் 'சாது' சுபாவம்கூட, எல்லோரிடமும் அன்புள்ள நல்ல மனுஷன்.

அவனது மனைவி ரங்கு கண்ணுக்குலட்சணமாயிருப்பாள். அவளது கன்னங்களில்இருந்த மிருதுத்தன்மை அவளது உள்ளத்திலும் இருந்தது. 'களுக்' கென்றுசிரிக்கும்அவளதுசிரிப்பின் துவனி கள்ளங்கபடமற்ற அவளது இதயத்தைப் பிரதிபலிக்கும். அந்த யுவதியின் சோபையில் வெறி எழுப்பும் வசீகரம் கிடையாது. ஆனால் பெருமை பொருந்திய ஒரு தாயின் தேஜஸ் அவளது நடை உடையிலும் அமைப்பிலும் பிரதிபலித்தது. பார்ப்பவர்கள் உள்ளத்தை அவளிடம் பறிகொடுப்பதைவிட அவளிடம் ஒருவித மரியாதையைக் காட்டினர். ரங்கு பொதுவாக அழகு மிகுந்த உத்தம நாயகி.

உள்ளம் கிளறிவிடப்படும்பொழுது அதில் எழும் எண்ண அலைகள் செல்லும் திக்குகள் பல்வேறு. துக்கக் கோலால் உள்ளக் குப்பையை கிளறிப் பார்க்கும்பொழுது குப்பை மேட்டிற் கடியிலுள்ள மாணிக்கங்கள் ஒளிவிட்டு மின்னும்' ஒரே புயல் அந்தக் குப்பையை மறுபடி மூடி மாணிக்கங்களை மறைத்துவிடும். ஆனால் அந்த உத்தம ஒளியைக் காணும் போது மனிதன் அந்த ஒரு நிமிஷத்தில் ஞானியாகவும் வேதாந்தியாகவும்—ஏன்? கடவுளாகவுமே— ஆகிவிடுகிறான். பண்பட்ட உள்ளத்தோடு அந்த நிலையில் மனிதன்யோசிக்கிறான்.

அறையில் விளக்கு பிரகாசமாக எரிந்துகொண்டிருந்தது. கட்டிலில் ஹரிஹரன் முழங்கையைத் தலையணையில் ஊன்றி உள்ளங்கையால் தலையைத் தாங்கிப் பிடித்த வண்ணம் படுத்திருந்தான். மற்றொரு கையை இடுப்பின்மேல் போட்டுக்கொண்டு 'அனந்தசயன' ரீதியில் சயனித்திருந்த அவன் மூச்சுகூடப் பலமாக விடாமல் மனைவியின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தான், கண் கொட்டாது. அநாவசியமாகத் தாயிடம் அடிவாங்கின குழந்தை அழுதழுது தூங்கினால் அக்குழந்தையின்முகம் எப்படியிருக்கும்? அவ்வளவு பரிதாபமும் ஏக்கமும் ஒருவித வெறுப்பும் நிறைந்திருந்தது அவளது முகத்தில் அழுததால் வழிந்த கண்ணீரின் தடம் அவளது மெல் கன்னங்களில் படிந்திருந்தது. ஓரிரண்டு தலை மயிரிழைகள் முன் நெற்றியில் ஊசலாடி அவளது பரிதாப மோஹன ரூபத்தைப் பன்மடங்கு சோபிக்கச் செய்தன.

சிவந்த அவளது கன்னம் இன்னும் சிவந்திருந்தது. அதிலே ஒரு தடம். ஹரிஹரன் அன்று மாலை அவள் கன்னத்தில் கிள்ளின தடம் அது!

அவன் ஏன் கிள்ளினான்! எவ்வளவு சிறிய சமாச்சாரம்! ஐயோ பாவம்! இந்த வடு மருந்து போட்டால் போய் விடும், ஆனால் அவளுள்ளத்தில் ஒரு வடு பதிந்துவிட்டால்? அவன் உடல் சிலிர்த்தது. விஷயம் ஒன்றும் பிரமாதமாக நடந்துவிடவில்லை.

அன்று மாலையில் காரியாலயத்திலிருந்து திரும்பி வரும் போது ரொம்பவும் பசியாகவும் அதன் பலனாக ஆத்திரத்துடனும் இருந்தான் அவன். பசியை பொறுத்துக்கொள்ள அவனால் என்றும் முடியாது. அப்படிப்பட்டவன் அன்று தன் நண்பன் ஒருவனுடன் போட்டி போட்டுக்கொண்டு காரியாலயத்தில் மத்தியானம் சிற்றுண்டி சாப்பிடாமல் 'உண்ணாவிரதம்' இருந்து பார்த்தான். மாலை வீடு திரும்பும்போது அவனால் நடக்கக்கூட முடியவில்லை. சிற்றுண்டிக் காப்பிக் கடைகளில் நுழையலாமா வென்று பார்த்தான். ஆனால் ஒரு எண்ணம் "வீட்டில் காபி வைத்திருப்பாள். அது வீணாகத்தானே போகும். பலமுறை ஒரே நாளில் காப்பி சாப்பிடுவதை அவன் அதிகம் விரும்புவதில்லை. ஆகையினால் இழுத்துப் பிடித்துக்கொண்டு வேகமாக நடந்து வந்தான். வெயில் தகித்துக்கொண்டிருந்தது. வீட்டு வாசற்படி ஏறினான். கதவு மூடியிருந்தது. தட்டினான். திறக்கப்படவில்லை. என்ன எழவு செவிடா? என்று எரிந்துகொண்டு தலைநிமிர்ந்து கதவை கவனித்தான். வீடுபூட்டியிருந்தது. அவ்வளவுதான். 'நாசகாலி எங்கே தொலைந்துவிட்டாள்? வெட்கங்கெட்ட மூதேவி என்று வயிறு எரிய நொந்துகொண்டான். அடுத்த வீட்டிற்கு வம்பளக்கப் போயிருப்பாள். வருவாள் வருவாள் என்றுஅவன் இருந்தான், வெகு நேரம் வரவில்லை. 'உஸ்' என்று சொல்லிக்கொண்டு அடுத்த வீட்டில் எட்டிப் பார்த்தான்: ஸ்வாரஸ்யமாகத்தோழியுடன் ஏதோ பேசிக்கொண்டிருந்தாள், இவன் முகத்தைக் கண்டதும் அந்தத் தோழி "ஆத்துக்காரர்" என்று மெதுவாக அறிவித்தாள் சத்தம் போட்டு. தலைகால் தெரியாமல் மகிழ்ச்சி உச்சத்தில் பேசியவண்ணம் தாயம் ஆடிக்கொண்டிருந்த இருவரும் கப்சிப்பென்று ஆனார்கள். 'பக் பக்'கென்று உள்ளம் அடித்துக்கொள்ள வெட்கத்தோடு கணவன் முகத்தைக்கூடப் பார்க்கதைரியமில்லாமல் எழுந்து வெளியே வந்தாள். ஒரே பயம்' கதவு திறந்தாள். உள்ளே இருவரும் நுழைந்தனர். காப்பிபோட உள்ளே சென்றாள். காப்பி போட அவள் சென்றதாகவே அவன் நினைத்து நடையறையில் சென்று உட்கார்ந்தான். நெடு நேரமாகியும் காப்பிவரும் வழியைக் காணோம். பசியின் உத்வேகம் மறுபடி ஆத்திரத்தை அதிகமாகக் கிளப்பிவிட்டது. கையாலாகாத வேளையில் களைப்பும் பசியும் சேர்ந்தால், நெய்யும் காலாக்கினியும் சேர்ந்தது போல்தானே? பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான் முடியவில்லை. 'விடுவிடு' வென்று உள்ளே எழுந்து வந்தான். கூடத்தில் ஓர் ஓரத்தில் அவள் நின்று ஏதோ செய்துகொண்டிருந்தாள், ஆத்திரம் அவனுக்கும் பொங்கி வந்தது. எவ்வளவு அலட்சியம்! குற்றமிருந்தும் அவள் எவ்வளவு திம்மாக்குடன் திரிகிறாள்பார்! "ஏய்! ஏன் இப்பொழுது எங்கிருக்கிறோம் என்ன செய்கிறோம் என்றே தெரியாமல் போய்விட்டதோ!' என்று சீறினான்,

சட்டென்று திரும்பிப் பார்த்தாள். முகத்தில் பயம் நிறைந்திருந்தது. இவனுடைய கோபம் காண அவள் இன்னும் பயந்தாள், 'ஏன் வந்தவனுக்கு காப்பி கீப்பி கொடுக்க வேண்டுமே என்கிற பிரக்ஞை கூட இல்லையோ!' என்றான் அதிகரிக்கும் கோபத்தோடு,

அவள் தலைகுனிந்தாள் பதில் கூறவில்லை.

விடு விடுவென்று போனா அவள்முகவாய்க்கட்டையைத் தூக்கிப் பிடித்து அவள் முகத்தைப் பார்த்து 'என்ன முழிக்கிறே!' ஊம்....என்று கர்ஜித்தான்.

பால் பால்...என்று ஏதோ சொல்லும்போதே அவளுக்கு அழுகை வந்துவிட்டது,

'எவ்வளவு பால்'?

'பால் .... பூனை கொட்டிவிட்டது' என்று நடுங்கும் குரலோடு சொன்னாள்,

அவ்வளவுதான் ருத்ராகாரமாகிவிட்டான் ஹரிஹரன். 'அடுத்த வீட்டில் வீட்டையும் கவனிக்காது கட்டம் ஆடு கடம். பால் இருக்கும். வெக்கங்கெட்ட மூதேவி! இனி அப்படிப் போவையா? ஊம்......? என்று அவள்மிருதுவான கன்னத்தைப் பிடித்து பலமாகக் கிள்ளிவிட்டு 'உருப்படாத சவமே' என்று கீழே அவளைத் தள்ளிவிட்டு ஆத்திரத்தோடு போய்விட்டான்.

(தொடரும்)

## இந்திய தத்வ சாஸ்திர காங்கிரஸ்

இந்திய தத்துவ சாஸ்திர காங்கிரஸ் 21-வது மகாநாடு அண்ணாமலை நகரில் டிசம்பர் 20-ந் தேதி நடைபெறும். 3 தினங்கள் நடைபெறவிருக்கும் இம்மகா நாட்டிற்கு கல்கத்தா சர்வகலாசாலையைச் சேர்ந்த டாக்டர் ராஸ்விகாரி தாஸ் தலைமை வகிப்பார்.

**In the Court of the District Judge**

Tiruchirapalli.

O. P. 56 of 1956

In the matter of Minor Srinivasan and Minor Vasantha

L. Balakrishna Chettiar —Petitioner

Lakshmibai Ammal & another Respondents

Please take notice that the application filed by the petitioner for appointing him as the property and personal guardian of the minors abovenamed is posted on 18-7-56 before this court for hearing objections if any to the said application.

K. Venkatrama Aiyer,

Vakil for petitioner

# ஹிந்து வாரிசுரிமை

(சென்ற வாரத் தொடர்ச்சி)

### வரம்புக்குட்பட்ட உரிமைகள்

பெண்களைப் பொருத்தமட்டில் விதவை முதலிய சிலவித காரணங்களால் சொத்து அவர்களுக்கு இறங்குகிற ஒரு சில விஷயங்களில் அவர்களுக்குக் கிடைக்கிற ஆஸ்தி அவர்களின் ஆயுட் காலத்துக்கு மாத்திரம் கிடைப்பதாகும்; அவர்கள் மரண மடைந்தவுடன் அந்த மொத்த அனந்தர வாரிசுக்காரர்களுக்கு (ரிவர்ஷனர்ஸ்) போய்ச் சேருகிறது. வரம்புக்குட்பட்ட இந்தச் சொத்து தீராத வழக்குகளில் மாட்டிவிடுவதற்குக் காரணமாயிருந்திருக்கிறது. ஏனென்றால், அனந்தர வாரிசுக்காரர்கள் அந்த சொத்தை வரம்புக்குட்பட்ட உரிமையுள்ள அப்பெண்கள் அந்த சொத்து விஷயமாய் நடத்துகிற ஒவ்வொரு விவகாரத்தையும் ஆட்சேபிக்க உரிமை பெற்றிருப்பதால் தீராத வழக்குகள் தொடரப்பட்டு குடும்பங்கள் நாசமடைவதற்கு இடமேற்படுகிறது.

ஸ்திரீதன சொத்தில்தான் ஒரு பெண்ணுக்குப் பூரண உரிமை இருக்கிறது. ஆனால் ஸ்திரீதன சொத்து மூலம் சேருகிறசொத்துக்களும் வரம்புக்குட்பட்டதாகவே இருக்கும், ஒரு பெண்ணுக்கு இறங்குகிறசொத்து சாதாரணமாய் அவளுக்கு பிரதான ஆதாரமாக இருக்கும்; அது பம்பாய் பிரிவைத் தவிர இதர பிரிவுகளில் ஸ்திரீதன சொத்தாக பாவிக்கப்படமாட்டாது. ஸ்திரீதன சொத்து விஷயத்திலும் வாரிசு ஒழுங்குமுறை ஒரே ரீதியிலில்லை. எந்தப் பெண் கல்யாணமானவளா அல்லது ஆகாதவளா என்பதைப் பொறுத்து அது மாறுபடுகிறது: அந்த விவாகம் அங்கீகாரமான முறையில் நடைபெற்றதா அல்லது அங்கீகாரமில்லாத முறையில் நடந்ததா என்பதையொட்டியும் அது மாறும். அந்த ஸ்திரிதனம் எங்கிருந்து என்பதைப் பொறுத்தும் அது வேறுபடும். பொதுவாகக் கூறுவதானால், சொத்து இறங்குகிற விதி முறை ஒவ்வொரு பிரிவுக்கும் வெவ்வேறாகும்:

“ இந்தியாவின் தென்மேற்குக் கடற்கரைப் பகுதியில் நிலவுகிற தாய்வழி முறையாவது பெரும்பாலும் சென்னை சட்ட சபை மூலமாகவும், திருவாங்கூர்–கொச்சி சமஸ்தான சட்ட சபைகள் மூலமாகவும் இயற்றப்பட்ட சட்டங்கள் மூலம் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் பெண்கள் வழியிலேயே சொத்து இறங்கும். ஆனால் இந்தியாவின் இதர பகுதிகளைப் போலல்லாமல், ஆணுக்கும், பெண்ணுக்கும் சம பங்கு உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது; பெண்ணும், பிள்ளைகளும் சொத்தை ஒரே ரீதியில் பங்கிட்டுப் பெறுகிறார்கள்.

### ஒரே ரீதியான திட்டம்

உயில் எழுதப்படாத சொத்துக்கள் சம்பந்தமாய் வாரிசுரிமையை நிர்ணயிப்பதற்காக தேச முழுவதுக்கும் ஒரே ரீதியில் பிரயோகமாகக்கூடிய ஒரு சட்டத்தை 1956-ம் வருஷத்திய ஹிந்து வாரிசுரிமைச் சட்டம் ஆக்கித் தருகிறது; அதில் கூறப்பட்டுள்ள வாரிசுரிமைக் காரர்கள் முறையாவது அன்பு, பிரியம் ஆகியவற்றின் அடிப்படையில் உரிமையை நிர்ணயிக்கிற கோட்பாடு அனுசரிக்கப்பட்டிருக்கிறது.

1956-ம் வருஷத்திய ஹிந்து வாரிசுரிமைச் சட்டம் சகல ஹிந்துக்களுக்கும் பிரயோகமாகும். ஹிந்துக்கள் என்பதில் ஹிந்து, பௌத்த, ஜைவ, சீக்கிய மதங்களை அனுசரிக்கிறவர்களும், முஸ்லீம், கிருஸ்தவர், பார்ஸி, யூதர் ஆகிய பிரிவினர் அல்லாதவருமான நபர்களெல்லாம் அடங்கியிருக்கிறார்கள். அந்த நபர் இச்சட்டம் அமுலுக்கு வருவதற்குமுன் ஹிந்து வாரிசுரிமைச் சட்டப் பிரயோகத்துக்கு ஒரு போதும் உட்படவேயில்லை என்றுநிரூபிக்கக்கூடியவராயிருக்கவேண்டும்.

### சட்டத்தின் வியாபகம்

இச்சட்டம் உயில்லாமல் மரணமடைந்து இருக்கக் கூடிய ஹிந்து ஆண்” அல்லது ஹிந்து பெண்களுக்குரிய சகல சொத்துக்களுக்கும் பிரயோகமாகும். ஆனால் பின்வரும் ஒரு சில சில்லறை விலக்குகளும் இருக்கின்றன:—

(1) விசேஷ விவாகச் சட்டத்தின் 21-வது பிரிவின்படி இந்திய வாரிசுரிமைச் சட்டத்தால் ஒழுங்குபடுத்தப்படுகிற வாரிசுரிமையுள்ள சொத்து. இதன்படி ஒரு விஷயம் தெளிவாகும். அதாவது ஒரு ஹிந்து ஆணும் ஒரு ஹிந்து பெண்ணும் விசேஷ விவாகச் சட்டப்படி விவாகம் செய்துகொள்வார்களானால், அவர்களது சொத்துக்கும் அந்த விவாகம் மூலமாய்ப் பிறந்தஅவர்களின் குழந்தைகளின் சொத்துக்கும் இந்திய வாரிசுரிமைச் சட்டப்படிதான் வாரிசுகள் நிர்ணயம் செய்யப்படும்.

(2) முன்னாள் இந்திய சமஸ்தான அதிபரொருவர் இந்திய சர்க்காருடன் செய்து கொண்ட உடன்படிக்கை அல்லது ஒப்பந்தம் காரணமாகவோ, அல்லது இந்தச் சட்டம் அமுலுக்கு வருவதற்குமுன் இயற்றப்பட்ட எந்தச் சட்ட திட்டத்தின் காரணமாகவோ ஒரு சொத்து ஒரே ஒரு வாரிசுக்கு இறங்குமாயிருந்தால் அத்தகைய சொத்துக்கள்; அதாவது மூத்த பிள்ளைக்கே வாரிசுரிமை என்ற விதி குறிப்பிட்ட சில விஷயங்களில் ஓரளவுக்கு அங்கீகரிக்கப்படுகிறது;

(3) கொச்சி சமஸ்தானம் இந்திய யூனியனுடன் இணைக்கப்படுவதற்குச் சற்று முன்னதாக கொச்சி மகாராஜா இயற்றிய ஒரு சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட ‘ட்ரஸ்ட்’ சம்பந்தமான சொத்துக்கள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு முக்கிய விஷயத்தை விளக்கி வைக்கவேண்டும். எந்த ராஜ்ய சட்டசபையாவது விவசாயக் கையிருப்பு நிலம் சிதறுபடாமல் பாதுகாப்பதற்காகவோ உச்ச கையிருப்பு நில வரம்பை நிர்ணயிப்பதற்காகவோ, அல்லது நிலக்குத்தகை உரிமைகளை இன்னொருவருக்கு வாரிசாக இறங்கும்படி வதற்காக விசேஷ முறைகளை வகுப்பதற்காகவோ இயற்றுகிற எந்தச் சட்டத்தையும் ஹிந்து வாரிசுரிமைச் சட்டம் கீழ்படுத்தி அதன் ஷரத்தை நிலைநாட்டுவதாகக் கருதப்படக்கூடாது.

### கூட்டுச் சொத்தில் ஹக்

மேலே சொன்ன விலக்குகளுககுட்பட்டு இச்சட்டம் உயில்லாமல் மரண மடைகிற ஹிந்துவின் சகலவிதமான சொத்துக்களுக்கும் உள்ள வாரிசுரிமையை ஒழுங்குபடுத்தும். ஒரு ஹிந்து ஆணுக்குள்ள சொத்து தான் சுயார்ஜிதமாகத் தேடிய சொத்தாகவோ அல்லது ஒரு மிதாக்ஷரக் குடும்ப கூட்டுச் சொத்திலுள்ள உரிமைப் பகுதியாகவோ (ஹக்) இருக்கலாம். மிதாக்ஷர குடும்பத்திலுள்ள கூட்டுச்சொத்தில் இருக்கிற ஹக் விஷயத்தில் ஒரு விசேஷ விதி ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. மரணமடைகிறஒருவருக்குள்ள ஹக்காவது, அவர் மரண மடைவதற்குச் சற்று முன்னதாக பாகப்பிரிவினை செய்யப்பட்டிருந்தால். அவரது பங்குக்கு எந்த அளவு சொத்துக்கு வந்திருக்குமோ அந்தப் பங்கு என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு அப்பங்கை நிர்ணயிக்கையில், எந்த ஸ்தலச் சட்டப்படியாவது அந்த நபர் பாகப்பிரிவினை கோரமுடியாதபடி இருந்த போதிலுங்கூட அதுபற்றி கவனிக்காமல் பங்கு நிர்ணயிக்கப்படும். ஒரு கூட்டு சொத்தில் பங்காளியாக உள்ள ஒருவர் அந்நபர் மரண மடைவதற்கு முன்னதாகவே அந்தக் கூட்டுப் பங்கிலிருந்து பிரிந்து வெளியேறியிருந்தால் பிறகு அதே கூட்டு சொத்தில் ஹக் தனக்கு உண்டு என்று கோரமுடியாது. ஒரு ஹிந்துவுக்கு ஒகு கூட்டு சொத்தில் இருக்கக்கூடிய ஹக்காவது அவர் மரணமடைந்தபின், சுயார்ஜிதமாக அவர் சம்பாதித்த சொத்து இச்சட்டப்படி எந்தவிதமாய் பிரிக்கப்படுமோ அதேவிதத்தில் பங்கு வைக்கப்படும்.

[ பக்கத் தொடர்ச்சி]

"ஓ அரசனே! உன்னுடைய உள்ளத்தில் கெட்ட எண்ணங்கள் ஓடியிருக்கின்றன. அதனால்தான் எங்களுடைய பசுவிற்குப் பால் வற்றிவிட்டது."

அரசன் மிகுந்த ஆச்சரியமடைந்தான். என்னுடைய எண்ணங்கள் உனக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?" என்று அவன் கிழவியைக் கேட்டான்.

"மன்னன் கெட்ட எண்ணங்கள் படைத்தவனாக இருந்தால், மக்கள்தான் அதனால் துயர்ப்படுவர் என்ற பழமொழியிருப்பது தெரியாதா?' என்று கிழவி மறுமொழி கூறினாள்.

அரசனுக்கு வெட்கம் பிடுங்கித்தின்றது. உடனே அங்கிருந்து அவசர அவசரமாகக் கிளம்பி குதிரை மேலேறி துரிதமாக சென்றுவிட்டான்.

## பல்வலி மருந்து

வைத்திய சாஸ்திரத்தில் நாகருத்தின் அபாண்டிக்குச் சமானமானவர்கள் யாரும் இல்லையென்றே கூறலாம்.

நோயாளிகள் அடிக்கடி அவரிடம் சிகிச்சைக்குச் சென்றூர்கள், அவருடைய திறமையான வைத்தியத்தினால் பேரும் புகழும் அவருக்குக் கிடைத்தன.

ஒருநாள் பாதுஷா தன்னுடைய அரண்மனைக்கு அபாண்டியை அழைத்தார், "நீ ஒரு திறமையான வைத்தியர் என்று ஒவ்வொருவரும் சொல்லுகிறார்கள். என் மகளுடைய நோயை உன்னால் குணப்படுத்த முடியுமானால், உனக்கு நான் சுவர்ணபிஷேகம் செய்யத் தயார்" என்று பாதுஷா அபாண்டியிடம் கூறினர்.

மூன்று தினங்களுக்குள் அரசகுமாரி நன்கு குணமாகிவிட்டாள்,

பாதுஷாவிடம் அபாண்டி வந்தார்,

"ஓ எல்லையற்ற ஞானக் கடலே! தங்களுடைய மகள், அரசகுமாரி, குணமாகி விட்டாள்" என்று தலைவணங்கி அவர் பாதுஷாவிடம் தெரிவித்துக் கொண்டார்.

"நான் உனக்கு வாக்களித்திருக்கிறேன். பாதுஷாவின் உருக்கு பத்தரை மாத்து தங்கத்திற்குச் சமானம், வீட்டிற்குப் போ. என்னுடைய சன்மானங்கள் உன்னைத்தேடி அங்கு வரும்" என்றுபாதுஷா கூறினர்.

ஆசை நம்பிக்கைகளுடன் அபாண்டி தன்னுடைய வீடு திரும்பினர்.

மறுதினம் ஒரு அடிமை கனமான பணப் பெட்டியை அவரிடம் கொண்டு வந்து கொடுத்தான்,

ஆவலுடன் அபாண்டிஅதைத் திறந்தார். அந்தோ பரிதாபம்! பெட்டியில் ஒரு பிடி செம்பு நாணயங்களே கிடந்தன,

நாட்கள் பல ஓடி மறைந்தன, அபாண்டியினுடைய வைத்திய உதவி பாதுஷாவிற்கு மீண்டும் தேவைப்பட்டது,

தாளமுடியாத பல் வலியால் பாதுஷா இரவும் பகலும் வேதனைப்பட்டார், ராஜவைத்தியர்கள் யாராலும் அவருடைய வலியைப்போக்க முடியவில்லை,

அவர்களுக்கு அபாண்டியினுடைய ஞாபகம் வந்தது,

"உடனே அவரை இங்கே அழைத்து வாருங்கள், என் மகளுடைய நோயை அவரால் குணப்படுத்த முடியுமானால் நிச்சயம் என்னுடைய வலியைப் போக்குவதற்கும் மருந்து வைத்திருப்பார்" என்று பாதுஷா ஆணையிட்டார்,

பாதுஷாவின்மந்திரியேநேரடியாக அப்பாண்டியின் வீட்டிற்குச் சென்றூர், "பாதுஷா பல்வலியினால் அவதிப்படுகிறூர், உடனடியாக அரண்மனைக்குச் சென்று அவருடைய நோயை போக்குங்கள்" என்று மந்திரி கேட்டுக் கொண்டார்.

மிகவும் பணிவுடன் வணக்கம் செலுத்திவிட்டு அபாண்டி கூறினர். "அரண்மனைக்கு போகவேண்டிய அவசியமில்லை, தாராள உள்ளம் படைத்த மாட்சிமை பொருந்திய கொடை வள்ளலுக்கு இங்கேயே நான் மருந்து செய்து கொடுக்கிறேன், அதைத் தாங்கள் அவரிடம் எடுத்துச் சொல்லுங்கள், இதோ ஒரு நொடியில் தருகிறேன்,

மற்றொரு அறைக்குள் சென்றுவிட்டு ஒரு நிமிஷத்திற்குள் அபாண்டி திரும்பி வந்தார், ஏதோ ஒருவித பொடியைக் காகிதத்தில் மடித்து மந்திரியிடம் தந்தார்.

அரண்மனைக்கு மந்திரி திரும்பினர்,

அன்று இரவு தன்னுடைய கதவை யாரோ பலமாகத் தட்டி இடிப்பதைக் கேட்டு அபாண்டி விழித்துக் கொண்டார்,

'உடனடியாக அரண்மனைக்கு வாருங்கள், எஜமானர் உங்களை அழைத்து வரச்சொன்னர்" என்று பாதுஷாவின் வேலைக்காரர்கள் கூவினர்கள்:

ஆதலால் அரண்மனைக்கு அபாண்டி ஓடவேண்டியதாயிற்று;

"என்ன மருந்து இது!" என்று பாதுஷா மிகக் கோபமாக அபாண்டியை நோக்கிக் கூச்சலிட்டார். "வலிக்கக்கூடிய பல்லின்மீது இந்த மருந்தைப் போட்டவுடனே, என் வாய்பூராவும் களிமண் நாற்றமடிக்கிறது, என்னைக் கேலி செய்வதற்கு உனக்கு எவ்வளவு நெஞ்சழுத்தம்" என்று பாதுஷா உறுமினர்,

"பெரும் புகழ் படைத்த ஓ பாதுஷாவே! நீங்கள் கோபப்படுவதற்குகான காரணமே இல்லை, இந்த மருந்து நீங்கள் அனுப்பிய தங்கத்தைப்போல மதிப்பு வாய்ந்ததாகும்' என்று அபாண்டி பதில் சொன்னர்.

நடந்த விஷயம் என்ன வெனில், மருந்துக்குப்பதிலாக காகிதத்தில் மண்ணை வைத்து மடித்து பாதுஷாவிற்கு அபாண்டி அனுப்பியிருந்தார்.

---



குளித்தலை டி. மு. கோர்ட்
OS 344/56

S. N. P. L. பழனியப்ப செட்டியார் —வாதி

கு. தா. கலிங்கப்பட்டி பெருமாள் கோனர் *(2)*, மன்னி, அடைக்காயி *(3)*

—2, 3 பிரதிவாதிகள்

ஷை நெ. 2, 3 பிரதிவாதிகளுக்கு தெரிவிப்பதாவது:

இந்த நம்பரில் மத்யகால வரும்படியைநிர்ணயம்செய்து Final Decree செய்ய மனுக் கொடுத்து ஷை மனு *17-7-56* தேதி விசாரணைக்கு போடப்பட்டிருக்கிறது. அன்று நீங்கள் ஆஜராகி உங்கள் ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ளத் தவறினல் உங்கள் பேரில் ஷை மனு எக்ஸ்பார்ட்டியாக தீர்மானிக்கப்படும்.

K. திருவேங்கடாச்சாரியார்
வாதி வக்கீல்.

## தென்னிந்தியாவுக்கு பிரிட்டிஷ் சர்க்கரை ஆலையந்திரங்கள்

---

தென்னிந்தியாவில் அமைக்கப்படும் சர்க்கரை ஆலைக்குத் தேவையான யந்திர சாதனங்களை பெய்ஸ்லி(ஸ்காட்லாந்து) யிலுள்ள ஓர் தொழிற்சாலையிலிருந்து கொள்முதல் செய்ய நிச்சயித்திருக்கிறார்கள். தினசரி 1000 டன்கள் கரும்பு பிழியக்கூடிய ஆலைச் சாதனங்கள் இவை. விலை மதிப்பு சுமார் 500,000 பவுன்கள். இதே தொழிற்சாலை, சமீபத்தில் பஞ்சாபில், இரண்டு ஆலைகளை நிருமித்துக் கொடுத்தது.

1840- ஆண்டு முதல் சர்க்கரை ஆலை யந்திர உற்பத்தியில் ஈடுபட்டுள்ள இந்த பெய்ஸ்லி தொழிற்சாலை, இந்தியா, பிலிப்பைன்ஸ், தென் அமெரிக்கா முதலிய நாடுகளிலுள்ள ஆலைகளுக்கு யந்திர சாதனங்களை அனுப்பி பிரபலமடைந்திருக்கிறது.

---

## கனிப்பொருள் தேட "பறக்கும்" சோதனைச்சாலை

---

விமானத்திலிருந்தவாறே, பல நூறு மைல்கள் பறந்து பூகர்ப்ப ஆராய்ச்சி நடத்தும் சோதனைச்சாலையை ஹன்டிங் ஜியோபிஸிக்ஸ் லிமிடெட் என்ற பிரிட்டிஷ் ஸ்தாபனம் அமைத்திருக்கிறது. யுத்த பிற்காலத்தில் எண்ணெய் வளமறிய விமானங்களை உபயோகிப்பது பிரபலமாயிற்று. எலக்ட்ரானிக் கருவிகளைக் கொண்டு பூமிக்கு அடியிலுள்ள பொருள்களை அறிவது சாத்தியமாயிற்று. இப்போது அமைக்கப்பட்டுள்ள பறக்கும் சோதனைச் சாலையினால் இரும்பு, நிக்கல், எண்ணெய், டிடானியம், தாமிரம், ஈயம், உரானியம் முதலிய பல பொருள்களின் கனிகளை ஒரே சமயத்தில் அறிந்து குறிப்பெடுத்துக் கொள்ள முடியும். முன்பு ஒரு குறிப்பிட்ட கனி வளமறிய பலநாட்கள் அலைய வேண்டியிருந்தது. இன்று, அதே வேலையை ஒரே நாளில் முடித்துவிடுவதுடன் வேறு பல கனிப்பொருள்களைப் பற்றியும் தகவல்களைச் சேகரிக்க முடியும்.

இந்தச் சோதனைச் சாலையின் செயல் திறனைக் காட்ட ஸ்பெயினுக்கும் ரொட்ஷியாவுக்கும் அனுப்பப் போகிறார்கள்.

---

## திலகர் நூற்றாண்டு விழா தபால் பில்லைகள்.

---

லோகமான்ய பால கங்காதர திலகர் பிறந்த ஸ்தலமாகிய ரத்னகிரியில் ஜூலை 23-ந் தேதி, திலகர் நூற்றாண்டு விழா தபால் பில்லைகளைச் செல் அடிப்பதற்காக விசேஷ ரீதியில் முதல் நாள் முத்திரை குத்த தபால்-தந்தி இலாகா பிரத்தியேக ஏற்பாடுகள் செய்திருக்கிறது.

ரத்னகிரியில் விசேஷ செல் அடிப்பு ஏற்பாடு செய்திருப்பதோடுகூட, நாட்டிலுள்ள இதர 13 தபால் பில்லை காரியாலயங்களிலும் (பிலேட்டலிக் ப்யூரோ) வழக்கம்போல் முதல் நாள் முத்திரை குத்தப்படும்.

ரத்னகிரியில் முதல் நாள் முத்திரை குத்துவதற்கு ரத்னகிரி போஸ்ட்மாஸ்டருக்கு முன்னதாகவே ஆர்டர்கள் கொடுக்கலாம்; அந்த ஆர்டர்களுடன் கவர்கள் எல்லாம் தயாரிக்கப்பட்டு தபாலில் அனுப்பிவைக்க வேண்டும் என்பது பற்றிய முழு விவரங்களையும் குறிப்பிடுவதோடு, தபால் பில்லைகள், முதல் நாள் கவர்கள், சிப்பக் கட்டணம், தபால் கட்டணம் ஆகியவைகளுக்குப் பிடிக்கக்கூடிய செலவுத் தொகையை இந்திய நாணயத்தில் அனுப்பிவைக்க வேண்டும். இதர தபால் பில்லை காரியாலயங்களிலும் அதேபோல் ஆர்டர்கள் கொடுக்கலாம்.

லோகமான்ய திலகரின் பிறந்த தின நூற்றாண்டு விழா ஞாபகார்த்த தினத்தைக் கொண்டாடுவதற்காக ஜூலை 23-ந் தேதியன்று இரண்டணா விலை மதிப்பில் ஒரே ரக தபால் பில்லை வெளியிடப்படுகிறது. மேற்படித் தபால் பில்லை விற்பனை ரத்னகிரி தபால் நிலையத்தில் காலை 8 மணிக்கு ஆரம்பமாகும்; முதலாவது தபால் பில்லையை பம்பாய் போஸ்ட் மாஸ்டர்-ஜெனரல் விற்பனை செய்வார். நாட்டிலுள்ள மற்ற தபால் நிலையங்களில் அத்தபால் பில்லை விற்பனை அன்று காலை 10 மணிக்கு துவங்கும்.

ஓரணா விலையிடப்பட்டுள்ள முதல் நாள் கவர் இருவர்ணங்களில் அச்சடிக்கப்பட்டிருக்கிறது. நான்கு தபால் பில்லைகள் உள்ள மூவர்ணச் சித்திர போஸ்டர் அட்டைகளும் விற்பனை செய்யப்படும், அந்த நான்கு தபால் பில்லைகளின் விலை உட்பட அந்த அட்டையின் விலை ரூ. 1.

ரத்னகிரியில் செய்யப்பட்டுள்ள ஏற்பாட்டுடன்கூட, புதுடில்லி, பம்பாய், கல்கத்தா, சென்னை, சிம்லா, லக்னோ, பாட்னா, கட்டாக், ஷில்லாங், ஜெய்ப்பூர், நாகபுரி, ஹைதராபாத் ஆகிய நகரங்களிலுள்ள தபால் பில்லை காரியாலயங்களிலும் முதல் நாள் முத்திரை குத்துவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

## இலக்கியச்சுவை

# குலேசகரர் பாடிய இராமாயணம்

—(இரா. சுராஜ்)—

குகன் கொண்ட கோபம!

துயரமே வடிவாய்த் தன் படையோடும், மந்திரி, மக்கட் குழுவினரோடும் தாவரசங்கமமென்னும் தன்மைய யாவும் இரங்கிடக் கங்கைக் கரையை வந்து அடைந்தான் பரதன்.

என்றும் காணமுடியாத கூட்டம் கங்கைக் கரையிலே!

தூய கங்கை நீரில் பரதன் பின்வந்த யானைகள் இரங்கி அவைகளின் மதஜலம் பாய்ந்த காரணத்தால் அந்த நீர் உபயோகத்துக்குத் தகுதியற்றதாயிற்று.

"அண்ணல் வெல்கரி
மதத்தருவி பாய்தலால்
உண்ணவும் குடையவும்
உரித்தன் றுயதே"

தனது எல்லேக்குரிய நிலத்தில் பெரியதொரு படையைக் கண்ட வேட்டுவர் தலைவன் குகனுக்குப் பெருவியப்பு ஏற்பட்டது. ஒருகணம் சிந்தித்துப் பார்த்தான்! இந்தப்படை எங்கிருந்து வந்திருக்க முடியுமென்று!

ஆம் ........ அயோத்தியிலிருந்துதான் இப்படை வந்திருக்கிறது........ஆளுகின்ற அரசை அண்ணனிடமிருந்து அபகரித்தது போதாதென்று கானகத்திலும் அவனை வாழவிடாது அழிக்கவே இப்படையைப் பரதன் அனுப்பி இருக்கிறான் போலும் என்று எண்ணியது அவன் மனம். அவன் ஆற்றல் என்ன சாமான்னியமானதா?

"குகனெனக் பெயரிய
கூற்றி னற்றலான்
தொகை முரட்சேனையைத்
துகளி னேக்குவான்
நகைமிகக் கண்கள் தீநாற
நாசியில்
புகையுறக் குனிப்புறும்
புருவப் பேர்விலான்"

தன்னிடம் தோழமை கொண்டு தன்னைக் குடும்பத்தில் ஒருவனாகவேஏற்றுக்கொண்டுவிட்ட இராகவனையும் அவனை எதிர்த்துப் படை திரட்டி வந்துள்ள பரதனையும் எண்ண எண்ணக் குகனுடைய கோபம் வளர்ந்துகொண்டே போயிற்று........

'கட்டிய கரிகையன்
கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன்
விழிக்கும் தீயினன்
கொட்டிய துடியினன்
குறிக்கும் கொம்பினன்
கிட்டியது அமரெனக்
கிளர்ந்த தோளினன்'

ஆடையை வரிந்து கட்டிக் கொண்டான் உடைவாளைப் பொருத்திக் கொண்டான்! பற்களை நறநற வென்று கடித்தான். சுற்றி நின்றவரை வெட்டும் மொழிகளாலும் நெருப்பு விழிகளாலும் கட்டளையிட்டான்.......போர் வந்துவிட்டது என்று உற்சாகமாகக் கொம்பெடுத்து ஊதினன் ... அந்த மகிழ்ச்சியில் அவன் தோள்கள் உயர்ந்து நின்றன;

இருப்பது யாரென்று தெரியாமல் எண்ணிக்கையால் பெரிய படை வந்திருக்கிறது.......

'எலியெலாம் இப்பகை!
அரவம் யானென
ஒலியுலாஞ் சேனையை
உவந்து கூவினன்' அவன்!

அவனது ஆணையை தலைமேற்கொண்டு வேடர் குலத்தோன்றல்களெல்லாம் தம்மைப் போருக்குத் தயார் செய்துகொண்டு அவன் முன் கூடினர்கள்........

சில காலத்துக்கு முன் தன்னிடம் இராமன் கொண்ட அன்பையும் தங்களுக்குள் ஏற்பட்டுவிட்ட உயிர்த் தோழமையையும் அவர்களுக்கு விளக்கி, சூழ்ச்சியால் அவனுக்கு உரிய அரசைக் கொண்ட பரதனது படை கானகத்திலும் ராகவனுக்குக் கேடு சூழ வந்துள்ளமையைக் கூறித் தன் கடமை சூழ்ச்சி புரிந்த பரதன் சேனையை அழித்து அண்ணல் இராகவனுக்கு அரசை அளிப்பதே யென்னும் அந்தப் பணிக்குத் தயாராயிருக்கும் படியும் கட்டளையிட்டான்,

"தோன்றின புளினரை
நோக்கிச் சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை
உம்ப ரேற்றுதற்
கேன்றன னென்னுயிர்த்
துணைவற் கீகுவான்
ஆன்ற பேரசு நீர்
அமைதிரா மென்றான்"

வளர்ந்த கோபம் குகனது வார்த்தைகளிலே குரல் கொடுத்தது.

"கங்கையின் அக்கரையில் உள்ள அவர்கள் இக்கரை சேர யாரும் படகோட்டக் கூடாது. தவறி யாரேனும் இக்கரைக்கு வந்தால் அவர்களைப் பிடித்து கங்கை நீரிலே எரிந்துவிடவேண்டும்......."

'துடியெறி நெறிகளும்
துறையுஞ் சுற்றுற
ஒடியெறி அம்பிகள்
யாதும் ஓட்டலீர்
கடியெறி கங்கையின்
கரை வந்தோர்களைப்
பிடி, எறி, பட வெனப்
பெயர்த்தும் கூறுவான்'

சொல்லி அடங்காத சோகம் ........... எல்லேயற்ற கோபம் ........... இவற்றின் உருவமாக விளங்கினன் குகன் ........... இராமன்முன்பு அன்பால் பேச்சற்றுப் போன அவன் எப்படியெல்லாம் பேசுகிறான்! கோபத்தில் கொட்டுகிறான் வார்த்தைகளை !!

(தொடரும்)

... பஜார்

## 'லலிதா'

வாசனை பாக்குத்தூள்
...M. முத்தையா நாடார் சன்ஸ்,
மலைவாசல், திருச்சி,





# கோர்ட் விளம்பரங்கள்

### குளித்தலை டி. மு. கோர்ட்

S. C. 368/56

பாப்புசாமி நாயகர் —வாதி
நல்லுசாமி நாயகர்
—பிரதிவாதி

வாதி, பிரதிவாதி பேரில் புரோநோட்டுப்படி துகை ரூ. 330 கிடைக்க தாவா செய்து 28—7—56௳ ஈரங்கி அன்று பிரதிவாதி ஆக்ஷேபணையைதெரிவித்துக்கொள்ளாவிடில் Exparte தீர்ப்பு ஏற்படும்.

(Sd.) V. S. ராமரெத்தினமய்யர்
அட்வகேட்.

### குளித்தலை டி. மு. கோர்ட்

S C No 382/55

செலம்ப கவுண்டர் —வாதி
பழனியாண்டி கவுண்டர்
—பிரதிவாதி

ஷை வாதிக்கு பிரதிவாதியால் வரவேண்டிய டிக்ரி கடனுக்கு ஸ்தாவர சொத்தை ஜப்தி செய்து 18—7—56 ல் ஏல நோட்டீசு கெடு. அன்று பிரதிவாதி ஆக்ஷேபணையைத் தெரிவித்துக்கொள்ளவேண்டியது.

Sd. V. S. ராமரெத்தினமய்யர்,
அட்வகேட்.

### விருத்தாசலம் டி. மு. கோர்ட்

O. P. No. 23 of 56

பாவாடை செட்டியார்
—மனுதாரர்
தண்டபாணி செட்டியார்
—ரெஸ்பாண்டெண்டு

மேற்படி நெம்பரில் விழப்பள்ளம் இறந்த மாணிக்க செட்டியார் என்பவருக்கு மனுவில்கண்ட வரவேண்டியகடனை மனுதாரரே வசூலித்து அடைய பாத்யஸ்தர் என்று மனுதாரருக்கு வார்சு சர்டிபிகேட் கிடைக்கவேண்டுமென்று மனுதாரர் இந்த ரெஸ்பாண்டெண்டு பேரில் மனு கொடுத்து நோட்டீசுக்கு உத்திரவாகி 9—8—56-ல் ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறது. அதற்கு ஆக்ஷேபணை உள்ளவர்கள் அன்று பகல் 10-மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

K. N. சேஷாத்ரி அய்யங்கார்,
மனுதாரர் அட்வகேட்.

### அரியலூர் டி. மு. கோர்ட்

S C 3417 55

பழனிவேல் பிள்ளை —வாதி
முத்துசாமி பகடை
—பிரதிவாதி

வாதிக்கு மேடோவர் செய்த பழனியாண்டி பகடைக்கு பிரதிவாதி 2—11—52௳ ரூபாய் 200-க்கு எழுதிக் கொடுத்த புரோநோட்டுபடிரூ. 232-10-0 கிடைக்க தாவா செய்து 17—7—56௳ வைக்கப்பட்டிருக்கிறது. ஷை தேதியில் பிரதிவாதி ஆஜராகாவிடில் ஒருதலைபக்ஷமாக தீர்மானிக்கப்படும்.

T. V. VENKATARAMAN,
Advocate.

### அரியலூர் டி. மு. கோர்ட்

O S 187/55

நல்லம்மாள் —வாதி
மைனர் ராமச்சந்திர செட்டியார் வகையரு
—பிரதிவாதிகள்
பாக்யத்தம்மாள்
8-ம் பிரதிவாதி

8-ம் பிரதிவாதி புருஷன் 24—10—51௳ ரூ. 480-0-0 க்கு வாதிக்கு எழுதிக் கொடுத்த புரோநோட்டுபடி ரூபாய் 576—0—0 கிடைக்க தாவா செய்து Hg. 18—7—56௳ வைத்திருக்கிறது. ஆஜராகி கக்ஷியை தெரிவிக்காவிடில் Exparte ஆக முடிவாகும்.

T. V. VENKATARAMAN,
Advocate.

### திருச்சிராப்பள்ளி ரெண்ட் கண்ட்ரோலர் கோர்ட்

H R C No. 94/56

The Vakf Estate by its Manager Haji S. P. E. S. Abu Bucker Rowther —Petitioner

Vs.

S. கன்னையா பிள்ளை
—எதிர்மனுதார்

ஷை நம்பரில் மனுதாரால், எதிர்மனுதாரை தாவா ஜாகாவிலிருந்து காலி செய்ய போடப்பட்டிருக்கும் ஷை மனு 24—7—56௳ போடப்பட்டிருக்கிறது. அன்று ஆஜராக தவறினல் ஒருதலைபக்ஷமாக தீர்ப்பு செய்யப்படும்.

(Sd.) R. S. Rajagopala Iyer,
மனுதார் வக்கீல்.

### துறையூர் டி. மு. கோ.

S C 302/1956

கிருஷ்ண ரெட்டியார் என்கிற கிருஷ்ணசாமி ரெட்டியார்
—வாதி
வடிவேல் என்கிற பெரியசாமி மூப்பன் வகையரு
—பிரதி வாதிகள்

ஷை நம்பரில் வாதி புரோநோட்டுகள் படி ரூ. 206—6—9-ம் செலவும் பின்வட்டியுடன் கிடைக்க தாவா செய்து 1, 2 பிரதிவாதிகளுக்கு ஸமனை ஒட்டி சர்வு செய்ய 24-7-56 தேதி ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறதை இதன் மூலம் அறியவும்.

(Sd) V. S. நரசிம்மய்யர்,
அட்வகேட்.

### துரையூர் டி. மு. கோ.

O.S 97/1956

சிதம்பரம் பிள்ளை —வாதி
அரப்புளியா பிள்ளை வகையரு —பிரதிவாதிகள்

ஷை நம்பர் வாதி பிரதிவாதிகள் பேரில் ஈட்டுப்பத்திரப்படி ரூ. 709—4—0 செலவும் பின்வட்டியுடன் கிடைக்க தாவா செய்து ஸமனை ஒட்டி சர்வு செய்ய ஈரங்கி 20—7—56-௳ வைக்கப்பட்டிருக்கிறது என்பதை அறியவும்.

(Sd) V. S. நரசிம்மயர்,
அட்வகேட்.

### துரையூர் டி. மு. கோர்ட்

S. C. 318/1956

பாப்பாத்தியம்மாள்—வாதி
பிச்சமுத்து முத்துராஜா 2
பிச்சமுத்து முதுதுராஜா 3
—2. 3 பிரதி வாதிகள்
நோட்டீஸ்

புரோ: நோட்டுப்படி ரூ. 299—9—0 கிடைக்க தாவா செய்து 25—7—1956 தேதி கெடு வைக்கப்பட்டிருக்கிறது.

R. T. வரதராஜன்.
வாதி வக்கீல்.

### துரையூர் டி. மு. கோர்ட்

O. S. 279/1956

பொன்னுசாமி முத்துராஜா
—வாதி
ராமசாமி முத்துராஜா வகையரு —பிரதி வாதிகள்
நோட்டீஸ்

பிரதி வாதிகளை தங்களுக்காகவும், மெய்யம்பட்டி & கங்காணிபட்டி கிராம குடிகளுக்குப் பிரதிநிதிகளாகவும் Implerd செய்து அந்தப்படி தாவா செய்ய மனுபோடப்பட்டு 30—7—1956 தேதி கெடு வைக்கப்பட்டிருக்கிறது.

R. T. வரதருஜன்,
மனுதார் வக்கீல்.




Edited, Printed and Published by ThirulokaSitharam at S. N. Printers, 24-A Theradi Bazaar, Tiruchi. Props: THE SHIVAJI (Private) Ltd.